வேற்றினன், மானபரன் மாவையாட்கொண்ட பூபதியருள வருகு மாரச்சுவாமி மாதரும மாகநித்தீசுரானுமிப்படி வளம்பெற நடத்தி னனே, (246)

மண்டலந்தொழுதேவ ராசய நரேந்திரன் மந்திரிகுமாரதள வாய், மன்னனுலகாளு நாளின் முத்துவசவய்யன் வாவென்று நித்தீசனை, கொண்டலெனவுதவுமா வைப்பதிவிளங்கிய குமாரச் சுவாமி மகிபன், கோதையுமை பாகருக்குத் தருகிராமமுங் குலவு மகமையுமருளியே, அண்டையிலழைத்துமுன் னெப்படி நடந்து வரு மப்படி நடத்தென்னவே யப்பணைதரத்திவ்ய லிங்கயன் மசாற் படியி னந்தமுனிவன் பரிவுடன், பண்டையில் வளம்பெறு படித் தரநடத்தினன் பணிமலையான் கருணையாற், பாராளவந்த மகிஞரா ளும் மன்னவர்கள் பலகாலு மிகவாழ்கவே. (247)

---

## தாரமங்கலம்,

### கட்டி முதலியார்.

#### ஆசிரியவிருத்தம்.

அனவரத மாவகிரி யீசருக்குமுதுபடி யறுபதொருகுறுணி பயறு, மதனிலொரு படிதோசையப்பமொருபடிபுண்ணி யாகமொ ருபடிபொங்கலும், மனவாத மானவடி சிற்றளிகை யொருபது மணத்தகறி நெய்கனிகுளம், மாலைசம்பாவமுது காலைதத்தியோத னம் மருவுகற்பூரவிடயம், தினவிரதமான வாபிடேக மெள்ளெண் ணெய்படி தேனுமொரு நெய்பிடி, தேங்காயிலங்கு பழநாரெடுள ரீரைந்து திருமஞ்சனத்திரவியங், கனிசாரை முத்தகு கன்ன லின்பிழிவு காவேரி கங்கவுதகங், கற்பூரவதி[illegible]மும் புனுகுகாப்பு மிவை கட்டி பூபதியுபயமே. (248)

சந்தகமுமாவகிரி மீதிலந்தணரன்ன சத்திரம் வாரிகுரவோர் சங்கமார்ச்சனை யதிதிகட்கிருபதமுது நற்சந்நியாசி கள்பிட்சையும்

சிந்தைபுறை முருகீசர் மேவியசிவாலயந் தேவிகணபதி நந்தியுஞ், சிவபூசைமடமாலயம் வாயுமூலையின் றிகழ் விநாயகர் கோவிலும், புந்திதருமார்திகேசவர் மேவுகோவிலும் புகலுபய நாச்சிமாரும், பொலிவுதரு சத்தமாதர்களுறை கோவிலும் புயலுலவு மேல்கோ புரங், கந்தருமை யொருபாகர் தன்றிருவி ழாவினிற் கனசகத்தி ரபோஜனங், கவினுதவு சந்திரசேகரர் கௌரிதிருமேனி கட்டி பூபதிபுண்யமே. (249)

வேறு.

அரவகிரியீசர்க்கு ருத்தி ராட்சபுயகங்கண வலயம். அணி தோட்டரளமாலிகைபுமரசந்தழைப்பொன்மணிப்பதக்கம்,மருவின் முலையாளுமை வயிரமணிபொட்டொடு மஞ்சக்காறை, மணமங் கிலிய முலைத்தளமு மகிழ் கொப்பொடு கொந்தளவோலை,விரிவுபெறு தோணுகபடம் விளங்குபுய தாயத்துமணி, மேவுந்தகட்டுப்பச் சைவட மேலாங்கனகவுருமாலுங், கரிவெண்மையுட னெடுக்கவலங் காரத்திருமஞ்சனக் குடங்கள், கவளம்பாகன் முதலியன கட்டி ராயன் புண்ணியமே. (250)

செஞ்சொற்பணிவெற் பார்பூசத்திருநாட் சிறப்புமண்டபமுந் திருக்காவேரித்துறை முழுக்குந் திருகார்த்திகைநட் சத்திரமும், மிஞ்சுபுகழ்சேர் மாசிமுதல் விழாவுமெட்டாந் திருநாளும் விசாகத் திருநாள் முதற்றிரு நாள் விளங்குமேழாந் திருநாளும், நஞ்சைப்பு சித்த சிவநிசியு நற்கேதாரஞ் சவுத்திமகா, நவமி நரகசதுர்த்தசியு நற்கார்த்திகையுஞ் சசிவாரங், கஞ்சற்பகிரி மிசைகிருத்தி காதீபா ரோகணப்பொரிமார் கழியாதிரைச்சங் க்ரமச்சிறப்புங் கட்டிரா யன்புண்ணியமே. (251)

விளங்குபுகழ் சேரரவகிரி வேலன் சிகரவிளங்கோவில், வே லன்றிருமுன் மாயூரம் வில்வார்ச்சனை யாயிரநாமம், உளங்கொள முதமெனு முகக மூறு *முதும் பரக்கிணறும், ஓங்குபசு நூற்றெரு மையுநூ றுபயமார்க்கத் திருப்பணியுந், தளங்கொளரியாசனக் குறடு

*அத்திக்குட்டைக் கிணறு.

தந்தச்சிவிகை மணித்தூபி தங்கக்கலசஞ் சந்தனத்தின் றருவாற் சமைத்த சப்பரமுங், கலங்கமகலும் பணியசல காவலருக்குப்படித் தரமுங் காருணியஞ்சேர் தாரமங்கைக் கட்டிராயன் புண்ணியமே. (252)

சீலம்பெரிய பணிமலைவாழ் சிவன்பூசனைசெய் தேசிகர்க்குச், செரிக்கைகங்களஞ்சி லாறுகட்டி திசழ்முக்களஞ்சிற் பவுத்திரமுங், கோலம்பெரிய துகிலாடை குலவுமனைவர்த்தனை நடத்திக், குமாரர்களுக்கு வித்தை கற்றுக்கொடுத்துப் பரிசோதனைபார்த்து, ஞாலம்பெரியகனகசபை நல்ல விருத்தா சலத்திலுறை, நற்றேசிகர்க்கு நிகராக்கி நன்றாய்ப்பெருமை நடத்துவதுங், காலம்பெற வந்தணர் கருமங் கடவாவகையின் முடிப்பதுவுங் காதல்பெருகு தாரமங்கைக் கட்டிராயன் புண்ணியமே, (253)

பன்னுந் தமிழ்சேர்கோதையுமை பாகன் றனக்கே வுபசாரம் பதினாறியற்றித் திருப்பணியா பரணந்துகிலானதுங் கொடுத்து, மன்னுந்தலத்தை யாதிசைவமறையோர் தம்மைத்தனதுதர வாசமெனவே வுபசாரமருவி மனவாஞ்சிதமளித்து, பொன்னும் புவியும் ரதகசமும் புரவிசிவிகைகாலாளும், புதல்வர்பெருமை யழகாண்மை புகழுந்தவமுஞ் சௌரியமுங்,கன்னன்றனைப்போற்கொடை கருணை கவிதைவிசய மநுநீதி, காருண்ணியமும் நவநிதியும் கட்டிராயன் பெற்றனனே. (254)

வேறு.

பன்னுமறைதெரிகோதை யுமைபாகர் சிகரமுமை பாகமுடையார் பெட்டகம், பைங்கனககோளகச்சிறுபீடமும்பரவை படிக்கமபிடேகபீடந், தென்னுலவு வடவாசன் முன்மண்டபஞ் சத்திர தீர்த்தக்கவிங்குமதிலுந் தென்றிருமடப்பள்ளி வடகோபுரஞ்சகஸ்திரலிங்கமுங் கோயிலும், மின்னுமேவல் மணியொட்டியாணங் கிரீடம் விளங்கு ருத்திராட்சவடமும், வீரர்சவுக்களி பதக்கமொடு இருவாசி வெள்ளியபிடேக கலசங். கன்னல்செறி நந்தவன கூப மண்டபபூசை கயிலாய வாகனமதின் காட்சி சிங்காரமிகு தோப்பு மிவைசியால கட்டி பூபதிபுபயமே. (255)

தலமருவுகோதையுமை பாகர்பூசைக்கினிய தாம்பிரகிடார சருவந், தாபிக்கநவபாத்திரங்கள் கொப்பரைகிண்ணி சங்குசேனைக் கால்களுங், குலமருவுதளிகை மணிபரிவாண மட்ட ணிகை குட தீபமுந் தூபமுங், குடையாலவட்டமுங் கண்ணாடி தட்டமுங் குளிர்சத்ர சாமரைகளும், நலமருவு பட்டுவகை பீதாம்பரஞ் சலவை நல்ல சந்திரகாவியும்,நானாவிதங்களழகான பரிவட்டமும் நயந்தமேற்கட்டு திரையுங், கலைமருவு மேதாலங்கார மணிமகுடமுங் கவினுதவு பெரியரதமுங் கனமான தாரமங்கையின் மேவு சியால கட்டிபூபதியுபயமே. (256)

தினமரவகிரியாரை யபிடேகமகபூசை செய்நாலு வேதமுழவந் திகழ்மந்த்ர புட்பவில்வார்ச்சனை ப்ரதட்சணை செப நமஸ்கார நியமம், மனமருவுபூசை மறையோர் கணக்கறை காவல் வாத்தியார் சாஸ்திரிகளும், மடமடிமை காவேரி மஞ்சனமுமாளிகையு மலர் மேவு நந்தவனமும், தனமருவு மிருடோலு நாகசுரமிருவருந் தல புராணத்தோதலுஞ், சந்நிதியிலொருநாலு நந்தியாதீபமுஞ் சந்தியா தீபங்களுங், கனமருவு சாம்பிராணி குங்கிலியதூபமுங் கற்பூர நிறைதீபமுங் காரணிக வடகோபுரத்தி லிருதீபமுங் கட்டி பூபதியுபயமே. (257)

சீருலவு கலியுக சகாத்தமாயிரமிசை சிறக்குமைஞ்ஞூற்றெழுபதின், நிகழூறதான விசயந்தனிற் பங்குனித்திங்களொரு பத்தொன்பதின், பாருலவு பூர்வபட்சந் தசமி பூசமும் பரவுசுக்கிர வாரமும், பண்ணியசுகர்மமுந் தைதுலையு மிதுனமும் பலனுதவு மேனாளினால், ஏருலவு செங்கோடை வருதிருவிளங் கோவிலெழிலா [redacted] வேலர் திருமுன், னியல்பான மயில்வாகனந்தனைப் பிரதிட்டை யினிதாகவே செய்தனன், தாருலவு மார்பினன் மங்கையிம் முடி கட்டி தந்த சியாலகட்டி, சற்புத்திராதிகளுடன் முறைநடத்தியே சந்ததமு மிகவாழ்கவே. (258)

கட்டளைக்கலித்துறை.

துங்கக் குரோதி தனிலாடித் திங்களிற் சோபனமாய்ச்
செங்கைக் கழகு தரவே ரகத்தரன் றேவியர்க்குத்
தங்கக்கடகஞ் சரியும் பவளமுந் தானளித்தான்
மங்கைப் பதிவரு சியால கட்டி மகிபதியே. (259)

பொங்கிய செல்வந் தருகோதை யீசரைப் பூசிக்கவே
பங்கய மார்பனைத் தெய்வ சிகாமணி பண்டிதனைச்
சொங்*கைப்பி ஞமேல கொடுத்தபி டேகமுஞ் சூட்டிவைத்தான்
மங்கை வரோதயன் சியால கட்டி மகிபதியே. (260)

விருத்தம்

பங்கயனை சேனை பதிகுரு மணமுஞ் செய்து
தங்கையின் மனவிருத்திக்குச் சம்பளம்படியுமீந்து
பொங்கிய புகட்செங்கோடர் பூசனை புரிவதற்கே
மங்கைமா நகர்வாழ்கட்டி மணிமுடி சூட்டினேனே. (261)

ஆறை—இளையா நாய்க்கன்.

ஆசிரியவிருத்தம்.

தேமேவுமரவகிரி நாகீசர் சந்நிதிசிறந்தகற்பக்கிரகமுந் திகழர்த்தமண்டப மஹாமண்டபத்திஞெடு, தென்கோபுரந்தடிகளும் பூமேவு நந்தவன வாவிமண்டபபூசை புகழுமஞ்சாநதிருவிழாப் பூசைபடி பதினேழு பபறுகறியமுதுதாம் பூலமாலிகை கந்தமும், மாமேவு மாசிலைவயாசி சிவராத்திரி மகாநவமிதீபாவளி மார்கழியுடன் கார்த்திகைத்தீபபொரிசோம வாரமும் பரிவட்டமும், கோமேவு மாலைவடைகாவேரி மஞ்சனங்குலவத்தியானவொலியும், கொற்றமிகுமாறைவல் லாளனிளையானருள் குமாரதிருமலையுபயமே. (262)

சீர்மேவு கலியுகசகாத்தமாயிரமிசை சிறக்குமைஞ்ஞூற்றறுபதின் செல்லுமைந்தான தாரணவருடமற்பிசைத் திங்களிருபத்தைந்தினிற், கூர்மேவுவேலுடைய மகிசூருநஞ்சயன் கோதையக்

* பொருள்

தலமதனையே கொள்ளைகொண்டேகினது கண்டுதயவாகியே கொள்ளைபரிபோனவகையிற், பார்மேவவே தனதுபுண்ணியமெனச்சிறிது பாலித்து நன்மையுதவிப், பட்சமுடனேசம்பு ரோட்சண நடத்தினன் படிமீதுபுகழ்பெற்றனன், தார்மேவு வாகைபுனை கண்ணப்பர் சேகரன் தருமமேகனிநெஞ்சினன், றருமருவு திருமலையல் லாளனிளையான் மரபு தருமந்தழைத்தேறவே. (263)

வெண்பா.

அத்தர் திருச் செங்கோட் டரனடிக்கே யன்புசெய்யும்
எத்தலமெண் ணுறை யிளையான்கேள்—இத்தலத்தே
வந்துகொள்ளை கொண்டான் மகிரூரா னீயதனைத்
தந்துகொள்ளை கொண்டாய் தவம். (264)

விருத்தம்

அண்டர்தொழுங் காளத்தியப்பருக்குக்கண் கொடுத்தா யதிர்ந்துவீழு, மண்டபமுந் தாங்கியநற் சிவகோசன் றனக்குமுத்தி வருவித்தாயே, கொண்டனிக ரானகொடை யல்லாள திருமலையா குற்றார்வாழ்வே, தண்டமிழ்சேரிளையானே துட்டர்கண்டா நறுவாகைத்தாமத்தோனே. (265)

* மூவருக்கு மகத்தியமா முனிவருக்கு மரசிருந்த முன்னையோர்க்குந், மீதவருக்குந் திரும்பாத காவிரியைக் கொங்கேற்றித் திறைகொண்டாயே, பூவிருக்குமுரமாயன் கடலடைத்தானவன் வேடம்புனைந்தவாறு, யாவருக்கு மிளையானே யல்லாள திருமலையா யீகையோனே. (266)

வெண்பா.

ஏவிளம்பி வச்சரத்தே யோகநா கீசருக்கு
மாவிளம்பக் கோயிலுமா மண்டபமும்—பூவிளம்பக்
கண்டா னல்லாளன் கருணையினா யானுலறத்
தண்டாவு வாகையுரத் தான் (267)

*கொள்ளை போன பொருட்குப் பிரதி உதவியகாலத்துப் புகழ்ந்தமைபோலும்.

வெண்பா.

சந்தியா தீபஞ் சதுரங்கந் தாம்பூலம்
நந்தியா தீப நடத்தினன்—புந்தியால்
எப்போது மாறை யினையான் றிருமலையான்
றப்பாமற் சீர்த்திகொள்ளத் தான். (268)

சிறுமுளைச், செங்கோடன்.

ஆசிரியவிருத்தம்.

திருமருவுகலியுக சகாத்தமாயிரமீது சேருமறுநூற்றினுட னே, சென்றுவருமேழான சயவருடவையாசி தேதியொரு பதி னெட்டிலே, குருமருவு திரவாரசட்டிபுனர் பூசமுங் கொண்ட தொருமேனளிலே, குவலயமதித்ததிரு நாககிரி நாகீசர்கோவிலின் சிகரிசெய்தான், மருமருவு திண்புயன் காளிமகிபாலகன் மரபுள்ள காவலர்களும், வண்மைசேர் காமாட்சி மாகேசனுரைகேட்டு மன் னுநிதிதரவாங்கிய, தருமருவு சிறுமுளைசை முத்தணன் சந்ததி தழைத்தசெங்கோட மகிபன், தன்னுதெனவேதாம்பி ரக்கலசம் வைத்தனன் சகலரும் மிக வாழ்கவே. (269)

மோரூர்க் காங்கேயர்கள்.

ஆசிரியவிருத்தம்.

மங்களசகாத்தமோ ராயிரத்தைந்நூறு மரு மிருபத்தொன் றினில், வரு சர்வதாரிதனிலிடப மாதந்தனில் வாழ்வுதவுபணி மலையினாள், எங்களுமைபாகர்பல கணிவாசன்மண்டப மிலங்கு மணியொட்டியுடனே. யினிய சித்திரகண்டமுத்திரம்போதிகையு மேற்றதளவிசையறைகளுங், கொங்கிளகு சாந்துதட்டோடு பாக் கல்லோடு குறைவற வழுத்தியேம, கூடமென மண்டபமமைத்த னன் வேளாள குலதீபமான கண்ணர், தங்களரசானதிரு மலையர்த் தநாரிநல தம்பிகாங்கயபூபதி ▪ தருமந்தழைக்கவே சந்ததிசிறக் கவே தாரணியின் மிகவாழ்கவே. (270)

தக்கை (இசைத் தமிழ்) இராமாயணம் .முதலிய பிரபந்தங்கள் ஆக்கு வித்தவன்.

குணமருவு பூசைமணி யபிடேக கலசநவ கும்பமொன்பது பாத்திரங், கொப்பரை கிடாரங்கள் செப்புக்குடந்தபிலை குழிவுருளை யரிவாணமும், மணமருவு தூபார்த்தியேகார்த்தி பஞ்சார்த்தி வசவார்த்தி புருடார்த்தியும், வடிவுறு மடுக்கார்த்தி யன்னார்த்தி திரிதளார்த்தி மங்களாலத்திகுடமும், பணமருவுநாகார்த்தி திருவார்த்தி கற்பூரபரிமள மகாலத்தியும், பலமிகு விபூதிமடல் குடையால வட்டமொடு பார்வைபெறு கண்ணாடியும், இணைகவரி மெத்தை தலையணை சிவிகை மஞ்சமு மினியமுத்துப்பந்தலு, மின்பமிகு மோரூரில் நலதம்பி காங்கேய னெனும்ப்ரவுட மானுபயமே. (271)

மூவுலகு மோசை தருசேகண்டி சின்னமு முழங்கு மெக்காளநவரி, முரசு சங்கொடுதிமிரிடக்கை மத்தளிபேரி மொழிநாக சுரபூரிகை, மேவுதவிலொடு சகலபதினெட்டுமேளமும் விருது நாடகநிர்த்தமும், வேதமொழி யாகம புராண மாறங்கங்கள் வித்தையதிவிதவேள்வியும், பூவினறு மாலைபல தேரலங்காரங்கள் புனைபிரதமுடிகலசமும், பொற்கவிகை சேருடி கொடியாடை பலவிருது புகலரிய தருமங்களும், தாவுபணி மாமலையு மேசராருண்மேவவே தனது புண்ணியமாகவே, தானடத்தினனெங்கள் மோரூரில் வரு நல்ல தம்பி காங்கய ராயனே. (272)

சோபனசகாத்தமோ ராயிரைத்தைஞ்ஞூறு தோன்று நாற்பத் தொன்றினிற்,சுகமானசித்தார்த்தி மிடப மாசந்தனிற்றுங்கமிகு நாகவரைமேற், ரூபனமதான முருகன் மகாமண்டபந் தளமுத்திரம் போதிகை, தட்டோடு பாவுகல் சுவர்பிடை வடப்புறந் தாவு மருகணியொட்டியுந், தீபநிரை தூபமண மாலைசாயங்கால செல்ல சம்பாவடிசிலும், பூபதிமதிக்கவரு நல்ல நாயகனுதவு புதல்வனிம் முடிநல்லவன் புண்ணியமதாகவே யித்தனை நடத்தினன் புவிமீது மிகவாழ்கவே. (273)

வெற்றிபுனை கலியுக சகாத்தமாயிர மிசை விளங்குமைஞ்ஞூற்றைம்பதின், மேவு சுக்கிலவருடவையாசி தன்னிலே வியனரவமலைமேலிடம், பெற்றவுமைபாகர் ப்லகணிவாசல் தன்னிலே

பெரிய மண்டபநடுவிலே பிரியமுடனேம கூடத்தை நிகரென்னவே பேருலகு மகிழ்வெய்தவே, பொற்றிருவிமானமது கண்டனனனே கதவபுண்ணியங் கைக்கொண்டனன் பூசுரரை யீசனைக்கவிரோரை யரசினைப் பூசித்துவரமெய்தினன், கொற்றமிகுமோரூர் படைத்த கண்ணன்கங்கை கோத்திரந்தன்னிலுதயன் கோகனக முகனுன நல்ல நாயகனருள் குமாரச்சுவாமி தானே. (274)

அரவகிரி யர்த்தநாரீசர் பச்சிமவாச லழகுசித்திரமண்டபம் அரவிந்தசிலை மண்டபமுமிருப்புக்கதவு மானைமுகவன் மண்டபம், பிரிவு பெறு தெற்கு வாசற் கதவு தாண்டவப் பத்திரைவிலாச முடனே பகருமிந்திரவிமானஞ் சந்தனக்குறடு பன்மாலைகட்டுகுறடு, திருவளருமாலயத் தளவிசை குகன் கோவில் தென்மேலையுயர் மண் டபஞ், சிகரி நடுவிடைமண்டபஞ்சமன் கன்மிசை சிறந்த சித்திரம ண்டபம், விரிவுள மகா நவமி மண்டப முடன் பாரிவேட்டையாடிய மண்டபம், மேலமுத வாவியிருபூவனமு மோரூர் விளங்கு நல்லய னுபயமே. (275)

திரமேவு கோதையுமைபாகரிட சந்நதி திருப்பணி நடந்து வரவே, சீமையெழுகரை நாட்டினுபயமார்க்கப்பகுதி சேரவகை செய்ததருமம், வரமேவு கயிலாய நாதராலய மதிலு மாதுபரிமள வல்லியார் மருவுகர்ப்பக் கிரகமர்த்த மண்டபமகா மண்டபம் பள்ளி யறையும், முரமேவு நிர்த்தமண்டபமுநட மாளிகையு மோங்கு சந்நதிவீதியி லுற்ற தென்சிறகு நடமாளிகையு நூறுபசு வுயரு மலைறமயாரகாமுஞ், சுகமேவு நந்தவனமுங் கிணறனேகமுஞ் சோ லைசெறி மோரூரில்வாழ், துங்கனெனு மத்தப்ப பூபனருளால் வந்த சுமுகனல்லவனுபயமே. (276)

ஆதரவு பெறு சித்திராபவுரணைத்திதியிலாயிரத்தைஞ்ஞூறு மே லானவிளநீர்கதலி யின்கனிக ளாயிரமைம்பது பலச்சர்க்கரை, போதரவு ததிபயசு நெய்புமதுவுங் கழைப் புனலு நற்கந்தவுதகம் பொன்னிநதி மஞ்சனங் கங்கை யுதகங் கொடு புயங்ககிரியானை வேலை, மாதயவுடன் பரவி யபிடேகமேத்தி நல் வஸ்திரம் பலசாத்

தியே மாலைமிருச்சந்தன கதம்பகஸ்தூரிமிருக மதபூடணங்களுதவி ஏதமற நல்ல சம்பாவரிசியசனங்களினிய பலகறி சூபமும், இப் படி நடத்தினன் குமாரநலநாயக னெங்கள் மோரூரதிபனே. (277)

ஏகமா மரவகிரியுமை கரத்திலிலகிய சரிபுடன் கடகம்
நாககங்கணமுஞ் செவ்வியபவள நன்மணி பதக்கமுந்துகிலும்
மாகமாதருமோ ரூரதிபதியா மன்னவ னல்ல நாயகன் சொல்
பேகனுங்குமாரச்சாமி காங்கயனற்பிரியமாயினி தளித்தனனே. 278

வெண்பா.

பவளஞ் சரிகடயம் பல்வயிரப் பொட்டுங்
கவளமணி கைக்கங் கணமும்—தவளநிறக்
கோதையுமைக் கென்றே குமாரசுவா மிக்கவுண்டன்
மாதயவாய்த் தந்தான் மகிழ்ந்து. (279)

காரணிக மாகநிலைக் கண்ணடி யட்டணிகை
ஏரணியுங் கோதையரர்க் கீந்தானே—தாரணியெண்
சீராளன் மோரூர்த் திருமலையத் தப்ப நல்லான்
பாராளும் வேலமகி பன். (280)

ஆசிரியவிருத்தம்.

அரவகிரி யீசருக்கமுதுபடி னிரண்டுமொனகறி சூபமுடனே ஆவினெய்பழம் வெல்லமமுதடைக்காயிலையு மாலத்தி சாம்பராணி யும், விரிவுபெறு காவேரி யுதகமொரு காவடியு மேவு சந்தனமோர் பலம்மேலான கர்ப்பூர கோரோசனம் புநுகு மேவுநந்தாதீபமும், மருவிலுயர் சாதிமல்லிகை முல்லை யிருவாச்சி மணமான செவ்வந் தியும், மாலைமுடி பூவில்வமாதிபல கட்டளைகள் மனமேவியே செய்த னன், திருவுலவு மோரூரில் நல்ல நாயகனுதவு செல்வனிம்முடி நல்ல வன், செஞ்சொல்பெறுவேலன் குமாரச்சுவாமியுஞ் செகமீது மிக வாழ்கவே. (281)

சீரார் சகாத்தத்தி லாயிரத்தைஞ்ஞூறு சேர்ந்ததொண் ணூற் றென்பதிற் றிரமான களவருடமைப்பசித் திங்களிற் சேரு மெட் டாந்தேதியிற், பேரானசோமவாரந்திரயோதசியுடன் பெரியவுத்ராட்

டாதியும், பெற்றநாள் செங்கோட்டிலர்த்தநாரீசர்முன் பெருவிஷ்ணு தீர்த்த குணபால், ஏரானகாசிவிசுவேசுரர் விசாலாட்சி யியல் நந்தி பலி பீடமும், இன்பமொடு பிரதிட்டை யாகவேசெய்தன னெழில்பெற்ற மோரூரில்வாழ், தாரார்தடப்புயன் வேலபூபதியுதவு சந்ததிகுமார நல்லான், தனதுதுணைவெற்றிக் குமாரச்சுவாமியின் சந்ததி தழைத்தேறவே. (282)

வெண்பா.

நாககிரி நாகேச நாதருக்கு வாருணமே
யாகவிசு வேசரையுண் டாக்கினன்—மேகமெனுங்
கையகவுண் டன்மோரூர்க் காங்கயர்கோன் வேலனருள்
* ஐயனெனு மாகவரா மன். (283)

ஆகமஞ்சேர் மோரூ ரதிபனையக் காங்கயன்சொல்
பேகன் குமாரகல தம்பியன்பாய்—வாகனந்தான்
றந்தா னுமைபாகர் தன்பவனிக் கோர்குதிரை
சந்தோட மாய்த்தழைத்தான் றன். (284)

நாகமுகன் கோவி னடுநா யகக்குறடு
மாகமுறு மண்டபமும் ¶ வைத்தானே—மேகமெனுங்
கையான் மதுரை நல்லான் கண்டாய் நளவருட
மெய்யா மரவகிரி மேல். (285)

கன்னல்செறி கோதைக் கயிலாயர் கூபமலேப்
பன்னுதமிழ் மூவர் படர் கோயில்—முன்னமுறு
நாட்டுவே லன்புரிந்தா னன்மையுடன் கண்ணர்குல
மேட்டிமைமாய்த் தான்வாழ்க வே. (286)

பூமகிழு மோரூர் பொன்னம் பலராயன்
பாமகிழுங் கோதைப் பதிவேலர்—தாமகிழக்
கார்த்திகையி னெய்தீபங் கல்லோட்டி லேயிரண்டும்
வற்றியினி தாயிருந்தா னே. (287)

* ஐயகவுண் டன்மீன வன். என்றும் பிரதிபேதம்.

¶ இளைப்பாற்று மண்டபம்.

பேருநல கெண் மோரூர்ப் பெரியவகை யாரரிசி
பாருலவு மாறு யடிநாளும்—நேருலவு
மண்டபமும் நெய்விளக்கு மாலைமட மாறுமற்
கண்டுநடப் பித்துவந்தார் காண். (288)

தேங்குபுகழ் மோரூர்ச் சின்னவகை யாரரிசி
பாங்குட னேரண்டு படிமாலை—யோங்குலகும்
எப்போதுங் கோதை யிறைவர்தமக் கேகியமந்
தப்பாம லேநடப்பித் தார். (289)

முளசை, அன்னத்தியாகி.

ஆசிரியவிருத்தம்.

புயல்மேவு நாககிரி வருவேலர் திருமேனிபோர்த்த சருவாபரணமும்,பூடணப்பெட்டியு மநேகபரிவட்டமும்பொன்காப்புவெண் கவரியும், நயமானபட்டு மபிடேக மகபூசையும் நல்லசம்பாவடிசிலும் நறைமேவு கறியமுது மதிகநைவேத்தியமும் நல்லசந்தன மாலையும்,இயலான பசுவுநெ யலங்கார தீபமு மெழிஞரிநாயகர்தமக் கேற்றகாவிரி யாடுதைப்பூச தீர்த்தமு மிலங்கியவசந்த விரிவுந், தயவாகவே திருத்தேர் தொழுதபரிசனந் தன்மதானங்கள்மிகவுஞ் சந்தத நடத்தினன் முளசைவேலன்றனது சந்ததி தழைத்தேறவே. (290)

வெண்பா.

தோகை யொரு பாலிலகு சோதிகன விற்றோன்றி
யோகையுறக் கூறு முறைப்படியே—நாககிரி
பண்டிதர் தீக்கை பரிந்துசெயப் பெற்றுய்ந்தான்
பண்டைவினை தீர்வேலப் பன். (291)

ஊமைதனைப் பேசுவித்தா *னும்பரிடு புட்பமழை
யாமெனவே பெய்யவகை † யாக்கினான்—தேமருவு
வேலன் முளசைவரு வேந்தன் பணிகிரிவாழ்
வேலன்மிசை யன்பாக வே. (292)

* திருச்செங்கோட்டு மான்மியம். ஷை குறவஞ்சி முதலியவற்றுட் சரித்திரம் அறியலாம்.

† ஒவ்வொரு புட்பமாக விமானத்துள்ளிருந்து கீழேதள்ளும் ஓர் சூத்திரம்.

## நாகமலைக்கவுண்டன்.

ஆசிரியவிருத்தம்

திருமருவு கலியுக சகாத்த நாலாயிரத்தெண் ணூற்றின்மேலாகவே, செல்வருஷபிரமாதி சித்திரைத்திங்களிற் றேதியொன்பதில் வெள்ளியிற், றருமருவு கைத்தலன் சிக்கரா சேநதிரன் ரூனுமப்பணைகள் செய்யச், சந்தோஷமாகவே ஏழூரில்வைகியே தான் றிருத்தேர் கொணர்ந்தே, குருமருவு செங்கோட்டி லர்த்தநாரீசருங் குமாரும்மகிழ் வெய்தவே, கொற்றவர்கள் மெச்சவே வைகாசியுச்சவங் கோலாகலஞ்செய்தனன், மருமருவு குவளையணி மார்ப னேவை யின்மேவு மன்னனன்னத்தியாகி மந்தரபுயாசலன் கந்தபூபதி சுற்பசுதன் நாகமலையே. (293)

கட்டளைக்கலித்துறை.

படிக்கின்ப மன்னன் மரிராசபூபதி பட்சஞ்செய்ய
குடிக்கின்ப மான சுபை சொயுங்காலைசெங் கோட்டிலன்பாய்
நடிக்கும் பதத்தர்த்த நாரீசர் வேலர்க்கு நன்மணஞ்செய்
கொடிக்கம்பம் நாக மலைராயன் ரண்டுங் கொடுத்தனனே. (294)

விருத்தம்.

விந்தைபெறுஞ் செங்கோட்டிற்கைலாயர் சந்நதியின் மேலைவாய்தன்
அந்தமிகு கதவுதனைக்கமபை முதலாணிகளு மன்பாய்ச்செய்தான்
செந்தமிழோர் கலிதீர்த்த நாகமலை பூபனருள் செல்வனான
மந்தரமென்புயனேவைக்கந்தமன்னனுலகின்மிகவாழ்கத்தானே 295

## கோக்கிளாய் வேலன்.

அரவகிரி யாலயத்து வடக்குவாச லழகுபெறு கோபுரமுன் வலமதாகப், பரிவுடனே யேவைவரு வேலனீன்றபாலகனுங் கோக்கிளாய்வேலபூபன், மருவளரு மிருகுறுந்தாளைந்து பாணி வாரணத்தை மலையெனவுண்டாக்கிவைத்துத், திருவளரு மானை முகனருளினாலே தியாகரிடகுலத்தை யெல்லாஞ் சிறப்பித்தானே. (296)

கறைசைமறையோர் கரத்திற் செங்கோட்டுத்தானிகர்தங் கவ்வைக்காக, முறைதனிற் றெலெழுதிப்பொன்வாங்கி யொப்பமிடு முன்பதாகக், கிருபையுடனேவை யன்னத்தியாகியந்த முறிதனையே கிழித்துப்போட்டு, நிறைவுறப்பொன்னொரு நூறு தந்து தலத் தார்காணி நிறுத்தினனே. (297)

இன்சொல் சேருந்திருச் செங்கோட்டிலர்த்தநாரீசர் மேற் பத்தியுடனே, யெழில்பரவு பெரியரதமுண்டாக்க வேண்டியே யின்பமாய் மனதிலெண்ணி, மஞ்சுலவு சங்ககிரிதனில் வாழுமுல்லள்ளி வருசிக்கராசேந்திரன், மனமேவவுரைசெய்து மப்பணைகள் வாங்கியே மன்னுசுபைசெயு நாடனில், மிஞ்சுதருமங்களிது வெனவுரைத்தவரவர்கள் மேவதிதி வருவகைசெய்தே, மேன்மைபெறு பெரியரத முண்டாக்கிவைத்தனன் மேதினியுளோர் புகழவே,கஞ்சமலர் வாவிதிகழ்தென்னேவை யாதிபன் கருணைசேர் நாகமலைசொல், கந்தமகிபாலகன் மைந்தரொடு சுற்றமுங் காசினியின் மிகவாழ்கவே

கட்டளைக்கலித்துறை.

நத்துப் பரவும் வயல் சூழ்தென்னேவை நகர்படைத்தோன்
சத்திய வாசக நாகமலை மன்னன் றந்தமைந்தன்
புத்திக்கப்பாச்சி யெனுநாட்டு வேலப்ப பூபனன்பாய்
முத்துச்சிவிகை கொடுத்தான் செங்கோட்டு முதல்வருக்கே.(299)

விருத்தம்

மாசிவிழாப் பூசவிழா வைகாசித்திருநாண் மண் டபங்கடாமும், பூசைபடி தினமாறு படிமாலைதிருவிளக்கும் புரிந்தெந்நாளுந், தேசமது புகழ்ந்திடவே யேவைவளம் பதியன்னத்தியாக ராசர், நேசமுடன் பணிமலைவா ழுமைபாகர் தமைவணங்கி நிலைநின்றாரே. (300)

வெண்பா.

தென்முளசைக் கண்ணர் தினமரிசி யைந்துபடி
தொன்மடமா மண்டபமுந் தோண்மாலைத்—தன்மம்
நடத்தினர் கோதையர்த்த நாரீச ரன்பா
மிடத்தின ராயிருந்தா ரே. (301)

ஆடரவகிரியர்த்த நாரீசர் பூசனைசெய் யாலம்பர் காசிபர்களும், அடைவான கொடுமுடித்தானீகருக்கு விலையாக முறைநாலு நாளும், ஏடெழுதி யொப்பமிட்டுப் பின்பு தியாகருறை யேவைவளநகரெய்தவே, யிதிலொருவர்வரலாகுமோ வென்றுசொல்லாமலே யெழுதி னீரென்றுதன், வீடதனிலூறுபொன் னுங்கொடுத்தேக னைசைவேதியரை விடைசெய்தனன், மென்முறிகிழித்தனன் சிறைதனையகற்றினன்மெய்காணி நிலையிட்டனன்,நாடரிய "விந்நன்றி செய்தநும்மரபினரை நண்ணுமெங்குல மக்களும், நன்மையுற வெண்ணுவ"ரெனக் குரவர்வாழிசொல நம்பு புகழெய்தினனே. 3ப2

## இராசிபுர நாட்டார்.

வெண்பா.

மாலை மடமு மலைவாய் மலைத்தேனும்
வேலனிட பள்ளியிலை மேவியே—சீலமுடன்
நந்துலவி ராசிபுர நாட்டார் ■ பணிமலைக்குத்
தந்தபரி சித்தனையே தான். (303)

## துலுக்கண கவுண்டன்.

ஆசிரியவிருத்தம்

சீருலவு மடதருமம் நாலுபேருக் கமுது திருமாலை பொன்னியுதகந், திருவிளக்கரிசிபடி ஏழரைப்படிபயறு சிலகறிகள் நெய்வெல்லமும், ஏருலவு தளிகை மரகதக்கபாய் துகிலாடை யெழில்புனைபதக்கமுடனே யினியகுன்றீசரிடதூபி கோவிலு மகிமை யெய்துகயிலாயர்திருமுன், வாருலவு நிர்த்தமண்டபமழகு சேரேம மருவியதுவார பாலர், வடகோபுரக்கதவு தவமிகு துவாதசி மன்னுமறையவர் போசனம், பாருலவு நாககிரி யீசருளமேவவே பத்தியுடனே செய்தனன், பன்னுதமிழ் ராசிபுர நாடுளதுலுக்கணன் பலகாலுமிக வாழ்கவே. (304)

■ வேளாளருள் அரசர் என்பதை, 1852-ஞூ த்திய மிராசு ரைட 57-வது பக்கத்தில் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது. இந்நூல் 270-வது செய்யுள் "வேளாளகுலதீபமான கண்ணர் தங்களாசு" என்பதனையுமறி■.

## மூணுசாவடிச் சின்னவேலகவுண்டன்.

அரவகிரி யர்த்த நாரீச ராலயமேலே வாசனுக்கருகாகவே அதிசயந்தருவிஷ்ணு தீர்த்தவடபால் மதில்க ளாலசியமுற்றதோர்ந் து, வருணதிசை முதல்வாயு மூலேபரியந்தமும் மதில் பிரித்தே கட் டினன், வாசல்முன் றிருநிலேக்கால் கோபுரத்தருகு மண்டபச் சிதைவகற்றி, தருணமுறுருத்திரோற் காரிலையாசியிற் றயங்கு மொளி விசுவேசருந், தனதுமை விசாலாட்சியுட னஷ்டபந்தனத் தருமமது நிறைவேற்றினன், வரிசையுளவன்ராசை வளர்சோம சுந்தரன் மகிழ் சின்ன வேல மகிபன் மைந்தர் பதினுறுடன்பிறை யாயிரந்தொழுது மகிமீது மிகவாழ்கவே. (305)

---

## பருத்திப்பள்ளி நாட்டார்.

தென்பருத்திபள்ளி நிலம் பாலே மேட்டிற் சிலநிலமும் மல்ல சமுத்திரத்திற்செய்யும், மன்பரித்தவளர்திகழுங் கொன்றையாற் றின்மாவடையுந் துத்திநத்த வரிகடானும், மின்பொருததமான கொழுங்கொண்டைதாளி வெல்லமுமீழுவர்வரி வைகைப்பொன்றே னும், அன்புடனே பருத்தி நாட்டார்கள்கோதை யர்த்தநாரீசருக் கேயளித்ததாமே. (306)

தினமமுதுபடியாறு கறிகளோடு திருமாலே திருவிளக்குஞ் சுகந்தக்காப்பும், அனமருவு மடதருமர் திருவிழாவி னழகியமண்ட பச்சிறப்புமமஞ்சிவேலே, கனமருவு பலருபய மார்க்கரேகை காவிரி மஞ்சனம் புழுகு காப்புமேற்றி, மனமருவுகோதையரனருளினுலே வாழ்பருத்தி நாட்டவர்கள் வரம்பெற்ருரே. (307)

### வெண்பா.

அர்த்த பா கத்திருநா ளம்மண்டபச் சிறப்பும்
மெத்தவே தானடத்தி மேவினுன்—பத்திபுனே
ஞாலம் புகழ்பருத்தி நாடுடையோன் காராளன்
வேலன் கனமாக வே. (308)

### சர்க்கரை மன்றாடியார்.

அநுதினமு மபிடேக சந்தனம் பலமிரண்டான காவிரிமஞ்சன மளிசித்மானவிள நீரிரண்டொடுசுருதி யத்தியானத்தருமமுந், தின மமுது படியைந்து பயறுபடிகறியோடு சேரநெய்வெல்லமுடனே செங்கோடருக்கிவை படித்தர நடத்தினன் சித்திரத்தேர் மீதினில், மனமகிழ மஞ்சனச் சங்கிலி கொடுத்தனன் மலைமேலை வாய்க்கவாடம் வைத்தனனநேக பரிவட்டமாலிகைதீப மடதருமமுஞ் செய்தனன், கனமிகுதி யீதல் சவுரிய மகிமைபெற்றனன் காரையாறூருடையவன் கந்தனெனவந்த சர்க் கரை பயறனுத்தமக் காமிண்ட மன்றாடியே. (309)

### மசக்காளி மன்றாடியார்.

வேலை சூழ்பணி மாமலைவேலரு விமலருமகிழ் வெய்தச்
சீலமாகியோரைம்படி யரிசியுஞ் சிலகறிபருப்போடே
மாலைகாவிரி மஞ்சனந்தீபமு மனமிகு தயவாகிப்
பாலை சேர்மசக்காளி செங்கோடரைப் பணிந்திவையளித்தானே.

### காங்கேய மன்றாடியார்.

பானுலாவிய பணிமலை வேலரும் பரமருமுளமேவத்
தேனுலாவிய காடை மன்றாடியார் திருந்தவிழ் மரக்காலுங்
கானுலாவிய கறிகளும் பருப்புடன் கவினுறு திருமாலை
யானுலாவுநெய்த்தீபமுந் தினந்தின மளித்தனன் பிழைத்தானே.

### பல்லவராயன்

மன்னுகாங்கயப் பல்லவராயமால் வளர்பணி மலையார்க்குத்
தன்னுதாகநந்தாவனஞ் சரப்பணி தயவுடன் றுகிலாடை
செந்நெலா மவிழ்குறுணி நெய் பருப்புடன் றீபநற்றிருமாலை
யின்னதாகவே நடத்தினன் றரணியினினிதுபெற்றிருந்தானே. 312

* பாண்டியனுக்குப் பகைவனான உத்தமக்காச்சோழனை மவனறவன். "ஆறெல்லாஞ் செந்நீரவனி யெல்லாம் பல்பிணங்கள், தூறெல்லாஞ் சோழன் சுரி குஞ்சி—தேறுதமிழ்க், கன்னிக்கோ னேவலினாற் காரைக் கோன் பின்றொடரப், பொன்னிக்கோ னோடும் பொழுது."

மாலதானரா தாபுரத்துடனெழின் மருவியவிருபத்து
நாலு நாட்டவருபய முஞ்சிறப்புட னல்விளக்கலர்மாலை
சாலமாமட தருமமும் பரிவுடன் றடபணி மலையார்க்கு
வேலையீதெனப்புரிந்தன ரவரவர் வேண்டியதடைந்தாரே. (313)

## நகரத்தார்.

### அர்த்தநாரி செட்டி.

பலமேவு கலியுக சகாத்தமாயிரமிசை பயின்ற முந்நூற்றைம் பதிற், படர்காளயுத்தி வருடந்தனிற் கோதையுமை பாகருக்கற்புத மெனத், தலமேவு பரமேசர் கயிலாய நாதர்தஞ் சந்நிதிமகாமண்ட பந் தனதர்த்தமண்டபங் கற்பக்ரகந்தூபி தங்குசோபானகுறடு, நல மேவு சந்திரசேகரர்குறடு பலிபீட நல்ல கற்கம்பமுடனே, நன்றென வமைத்தனன் கற்பதருவாமர்த்தநாரிகாரண வணிகமால், குலமேவு சந்ததி தழைத்தேறவுந்தனது கோத்திர மிகுந்தேறவுங் கொற்றநவ கோடி நாராயணனெனும் பெருமை கொண்டுபுவிதனில் வாழ்கவே.

திருமடப்பள்ளி மலை மீதுமட மண்டபஞ் செப்புக்கிடாரமணி யுந் திருமுலைத்தளமோலை யொட்டியாணங்காறை செம்பொனின் வயிரமணியும், ஒருமட மிரக்கத்திலானைமுகவன்கோவி லோங்கு சங்கிரமபூசையும் உற்றதிருநாளுபய வபிடேககட்டளைக ளொடு சாந்து சாத்துபயமும், மருமுடி யுமைக்கிடது பாகங்கொடுத்தபணி மலை யீசருளமகிழவே மங்கைவரு சீயாலகட்டி புண்ணியமாக வத் திரமநேகங்களுந், தாமுடைய வமரகுன்றியிலாயிரத்தலைவர் சோ லைசெறி குன்றைநகரார், துங்கவெழுகரை நாட்டின் மேவுவணி கேசுரர்கள் சுபமுற வியற்றினரே. (315)

## வேலாயுதன்.

### வெண்பா.

அத்திமுகன் கோவி லழகான சோபனமுஞ்
சித்திமட புண்ணியமுஞ் செய்தானே—புத்தியுடன்
நந்துலவுங் குன்றைவரு நல்லணபூ பன்பரிவாய்த்
தந்தமகன் வேலாயு தன். (316)

## திருவேங்கடநாதன்.

கட்டிரதக் கீழ்பாற் கணபதியு மண்டபமு
மட்டதிக்கெண் கோதையிலுண் டாக்கினன்—இட்டமுடன்
சிந்ததைய வாகிச் சிவசூரிய வணிகன்
றந்ததிரு வேங்கடநா தன். (317)

## நல்லகட்டி செங்கோடன்.

### விருத்தம்.

தென்னிலங்கிய பணிமலை வேலர்தன் சிறந்தசந்நிதிவாசன்
முன்னிலங்கிய துவாரபாலகர்களை முறையுடன் புரிந்தாரால்
கன்னிலங்கிலை வேணல்ல கட்டியுங் காரணவணிகேசன்
இன்னிலம்புகழ் மேவுசெங்கோடனு மிருவருமிகவாழ்க. (318)

## சுக்குட்டி செட்டி.

தென்மகிழ் கோதை மேவுந் திருக்கயிலாய நாதர்
முன்மகிழ் நந்திகேசர் முழுமணிக்குற டுண்டாக்கி
மன்மகிழ் குன்றை நோட்டம் வைசியகுலன் சுக்குட்டி
தன்மமா யிடபதேவர் தாபனஞ் செய்வித்தானே. (319)

## சிவந்தபாதம்.

அணிமலைத்தருமமேவு மாயிரத்த வருதாகப்
பணிமலைகாவலர்க்குப் பழயமண்டபத்து முன்னே
துணிமலைக்கருணைவாரி சுரந்திடு சிவந்தபாதம்
மணிமலைக் கனகமீந்து மண்டபங்கட்டினனே. (320)

## குமரவேலப்ப செட்டி.

நன்றிசேர் கோதையர்த்த நாரியீசருக்கு முன்னே
வென்றியா யிரவரன்பு மேவிய மடத்தின்பாங்கே
குன்றைவாழ் வணிக னேட்டங்குமார வேலப்பசெட்டி
மன்றுள்போல் வடக்கு வாய்தல் மண்டபங்கட்டினனே. 321

### அர்த்தநாரி செட்டி.

நந்துலா வாவி சூழும் நாகமாமலையின்மீது
கொந்திய வடக்குவாய்தற் கோபுரத்தங்கி மூலே
தந்திமாமுகனுங் கோவிருனுமே குன்றைகோட்டஞ்
செந்தமிழர்த்தநாரி செட்டி யாருபயந்தானே. ( .22)

வெண்பா.

நாககிரி வீரன்மலே நந்தீ சுரர்தமக்கு
மாகமொரு மண்டமும் வைத்தானே—மேகமெனும்
நாரா யண வசிய னல்குமர்த்த நாரிமன்னன்
தாராள மாய்க்கொடுத்துத் தான். (323)

### செங்கோட்டு நல்லதம்பி.

விருத்தம்.

தென்னுலவு காராளன் செங்கோட்டு நல்லதம்பி [illegible]
மன்னுபுகழ் நல்லீசர் தாபனையு மண்டப[illegible]த [ல்
பன்னுதமிழீரோட்டி னஞ்சையிருபாவுமவர் பட[illegible]யீந்து
நன்னிலமெண்டெய் வசிகா மணிக்குருவுக் க[illegible]டகம் நடத்தினனே

### முத்தியப்பன்.

வெண்பா.

காரணிகர் கோதைக் கணபதியார் சப்பரமும்
பாரணியு மூடிகமும் பண்ணினன்—ஏரணியுந்
தொண்டைவள நாடன் றுரைநயினன் முத்தியப்பன்
தண்டமிழ்சேர் கங்கைகுலத் தான். (325)

### இருப்புலி—இளையாக் கவுண்டன்.

வெண்பா.

தென்னுலவு நாககிரி சித்திர மண்டபத்தை
மன்னுவடி வேலவர்முன் வைத்தானே—பன்னுதமிழ்ச்
சொல்லி லிளையான் சுமுகன் விகாரிதனிற்
பல்லுலகும் போற்றும் படி. (326)

நாகமலைக் கோவிலுக்கு நாயகமென் றேமுருகர்க்
காகவொரு மண்டபமுண் டாக்கினான்—பேகன்
இளையா ளிழலி லிமையவரு மாருங்
களையாற வேபணிவார் கள். (327)

செல்லனிளை யானிரும்பைச் செம்மலிரு பாணிகொண்டு
பல்லுலகெண் கோதைப் பதியார்க்கு—நல்ல
திருப்பணியும் பூசனையுஞ் செய்துசெய்து சன்மக்
கருப்பிணியை மாற்றிவைத்தான் காண். (328)

ஆசிரியவிருத்தம்.

மங்கைவரு கட்டிரத வடகீழ் விடாயாற்றி மண்டப மகா பூசையு மலைமீது காலசந்தியிறு படியரிசி மடமாலைநந்தவனமும், துங்கரவகிரிவேல னிர்த்த மண்டபவணிகள் சூழ் சித்திரகண்ட பூடனை துாயகுமரீசர் சந்நிதிமண்டபங்கிரி துலங்குமட மனதான முந், திங்களணி யர்த்த நாரீசபண்டிதருடைய திருமாளிகைக்கூட முஞ், செழுமறைசொலுஞ் சதா சிவபண்டிதர்க்கினிய தேசிகப்பி ரதிட்டையும், பொங்குபுகழ்சேர்குலோத்துங்க பட்டன் றுணைவர் பூணுநூலொடு வதுவையும் புண்ணியகுமாரனிளை யானிரும்பை யையுடைய பூமிபாலக னுபயமே. (329)

பொன்னய்யன்.

சீரணியுஞ் செங்கோட்டி லர்த்தநாரீசரிட சித்தமேவ, கார ணிகவயிரவனூர் சிகரந்தன் புண்ணியமாய்க் கட்டிவைத்தான், தார ணியெண்குமாரமங்கைக் கவுண்டனியன் குழந்தையப்பன்றந்தைமந் தன், வாரணிமுன்னூன்மார்பன் பொன்னய்யனிப்புவியின் வாழ்க மாதோ. (330)

அர்த்தநாரி அய்யன், முத்தய்யன்.

அரவகிரி யடிவாரத் தறுமுகவர் தூபிசெய்தானலம்பாயன் குரிசிலெனுஞ் சுப்பிரமணிய பண்டிதன்பாற் சேர்க்கையுள்ளோன் கோதைவாழ்வோன், அருமறையோனர்த்த நாரீசுரையன் முத்த யன் காணன்பாய்த்தானே, துரிதமாய்த்தன்மமிதைச்செய்து மனத் துன்பமறச் சுகம்பெற்றானே. (331)

### சுங்கம், திருவேங்கடம், அர்த்தநாரியப்பன்.

கட்டளைக்கலித்துறை.

மாலோ னுமையை யானுருக் கீந்த வகையெனவே
பாலான மேனியர் நாகேச லிங்கர்க்குப் பாணிவட்டஞ்
சேலார் பழைசையில் வாழ்திரு வேங்கடந் தென்றெழுவூர்க்
கோலா கலனர்த்த நாரியுங் கூடிக் கொடுத்தனரே. (332)

### தானத்துக் கணக்கு, ராமபத்திரன்.

ஆசிரிய விருத்தம்.

மங்கள சகாத்தத்திலாயிரத் தைஞ்னூறு மருவுமுப்பத்தெட்டினின், மன்மதமெனும் வருடமேட மாதந்தன்னின் மன்னுசூரப் பள்ளியிற், பொங்கமுடனொருகுளந் தன்னையுண்டாக்கினன் புகழாவகிரியார்க்கெனப் போஜன் மரிராசேந்த்ர னுடையபுண்ணியமதாய்ப்புனிதன் முத்தய்யன் மகிழக், கொங்கினுயர் செங்கோடையர்த்தநாரீசருங் குமாரும் வேதியர்களுங், கோவிலின்பரிசனர் கண்முதலான பேர்க்கமுது குறையாத வகைசெய்தனன், கங்கைகுலனனவேள் கோதைநகராதிபன் கந்தச்சுவாமிபாலன், கருணைமிகுராமபத்திரமகிபாலகன் காசினியின்மிகவாழ்கவே. (333)

வேறு.

முன்னமொரு பகீரதென்றுன் கங்கைதனைக்கொண்டு வந்த முறைமை போல, மன்னர் மன்னன் மரியேந்திரன் மந்திரிமுத்தையனிட மனதுமேவ, அன்னதருவளாகரந் தன்னிலர்த்தநாரீசர்க்காகவேண்டிக், கன்னன் மதன்கந்தனருள் ராமபத்திர னொருகுளத்தைக்கட்டினனே. (334)

### இருகாலூர், அத்தப்ப கவுண்டன்.

நானிலமதித்தபணி மலைவேலருங்கருணை நாரியுங் [illegible]யொருபாகரும், நராசரமரர்முனிவோர்கள் புடைசூழவே நக[illegible]லமானபவனி, தானுலவிவந்தபின் கற்பூரதீபமுந்தட்டிபல பரிம[illegible],சகலரையனுப்பவுந் தங்கமகமேருவிது தானென்னவொரு[illegible]டபம்,

பானுலவு கால்களிருபத்து நாலுத்திரம் பாவுதளவிசைபோதிகை, பலவோடமைத்துநம் மலைமீதிரவிகோவில் பண்ணி நற்றவமெய்தி னன், தேனுலவு மங்கைவரு கட்டிமனமகிழவே தேசதேசம்புகழ வே செஞ்சொலிருகாலூரிலத்தப்பபூபதி சிறந்தசுக்கில வருடமே.

கட்டளைக்கலிப்பா.

ஆரணந்திகழ் செங்கோடர் சந்நிதி யனுப்பு மண்டப நாலாறு காணிறை, பாரணிந்த தளம்போதியுத்திரம் பாவுகல்லுடன் றட் டோடு மேல்புரஞ், சீரணிந்தநற் சியாலகட்டிதன் சித்தமேவிரு காலூர்ப் பெரியவன், காரணம்புக ழத்தப்பூபதி கட்டினன்பிரமாதா தந்தன்னிலே. (336)

செட்டியாக் கவுண்டன்.

ஆசிரியவிருத்தம்.

ஆடரவகிரியினடி வாரமுறை கயிலாய ராலய மகாமண்டபத் தழகுதாண்டவகுறடு மலைவிநாயகர் குறடு மசல நடராசர்குறடுஞ், சேடகிரியேறுபடி சிவதீர்த்த தட்சிணத் திசை நூறுபெரியபடியுஞ் செஞ்சொனூறும்படி தனைப்பெரியதாகவே செய்வித்த தொருதரும மும், நீடுவயிரவதீர்த்த நிருதிதிசையாகவும் நிலைமைதரு நலநாயக, னிறைமண்டபத்திடையுமாமிளைப் பாற்றியும் நித்தியமனதான நிபு ணன், நாடுபுகழ் குமரமங்கல மேவுதூரனுயர் நதிவமிசகுலசேகரன் நன்மைபெறு குமாரபூபதி செட்டி யன்புடனடத்தின திருப்பணி களே. (337)

வேறு.

கோதைக்கிரியிற் சிவதீர்த்தக் குணபாற் சித்ரகூடமென
மாதர்க்கரசி மசவேலன் வள்ளிதொடுத்த மண்டபத்திற்
பாதிக்குறடு சுவர்பிடைசெம்பாதிக்குறடு மேல்வேலை
நீதிக்குமர புரித்தூரன் நேயன் செட்டிபுண்ணியமே. (338)

எல்லப்ப நாயக்கன்.

வெண்பா.

சீறும் பணிமலையைச் சேவிக்க வேயடியா
ரேறும் படிபதினு றீராளை—சீருடனே
செய்தான் மடமுஞ் சிறந்தகுன்றைக் கொல்ல*வெல்ல
னய்யா னிருந்தா னுகம். (339)

* தெலுங்கு பேசும் இடையர், பொக்கிஷகொல்லர் எனவும் படுவர்.

## இரணபுரம், நல்லயன்.

சைவசேகரன் றூரமங்கையில் வருதலத்தான்
தெய்வவேதியனல்லயன் சிவத்துசர் திலகன்
மைவரும்பணி மலையடி வாரமே சிறக்க
மெய்வரும்பத மண்டபமன்புடன் விதித்தான் (340)

## திருமுடித்தாசி, சேனுபதி வேலாள்.

வெண்பா.

பன்னுதமிழ்ச் சேனு பதிவேலா ளுகவரை
மன்னுபடி வாசல் வழிமீது—மின்னுமணி
மண்ட பத்தைக் கண்டாள் வணங்கினுண் மாயையெனும்
பண்டவத்தைத் தீரும் படி. (341)

## தயிலி.

வானந்த மென்னுமொரு மண்டபத்தை யேதயிலி
தானந்த மென்னச் சமைத்தானே—ஆநந்த
வச்சரத்தே கோதை வருவீர பத்திரன்முன்
றச்சுரத்த னல்லழகாய்த் தான். (342)

## அணை அர்த்தநாரிக் கவுண்டன்.

சற்ப சயிலத் தடவரைத்தோ ணிக்கருகே
அற்புதவி ரேச னமர்கோயில்—சற்பதரு
ஆனேனம் மாந்தையணை யர்த்தநா ரிக்கவுண்டன்
றூனேயுண் டாக்கிவைத்தான் றூன். (343)

## செங்குந்தச் சின்னுன்.

பாருலகெண் கோதைப் படிப்பேழைக் கல்லருகே
சீருலவு மண்டபமுஞ் செய்தானே—ஏருலவு
சின்னுன் குகனடியான் செங்குந்தன் ராசைவரு
மன்னும் புகழபிரா மன். (344)

### குருவம்ம மாணிக்கி.

அன்புநெடுஞ் சேடகிரி யாதிசிவ தீர்த்தமிசைத்
தென்புரமோர் மண்டபமுஞ் செய்தாளே—யின்பநெறி
யாருமெதி ராதகுரு வம்மமா ணிக்கிவட
மேருகிரி யைப்போல வே. (345)

### செவ்வந்தி செட்டி.

வெண்பா.

அவ்வந் தியம்போ லயன்றீர்த்த வுத்தரத்தே
செவ்வந்தி செட்டிதிருச் செங்கோட்டிற்—பவ்வந்
தொலையவொரு மண்டபமுஞ் சோபனமுஞ் செய்தான்
நிலைமைபெற வாழ்ந்திருந்தா னே. (346)

### அகரத்துச் செட்டி, வேலப்பன்.

சேடகிரி யாலயத்துத் தென்மேலை மண்டபத்தை
நீடுமுகி லென்ன நிறுத்தினான்—நாடுபுக
ழானகுசச் செட்டி *யகரத்துச் செட்டிகளிற்
பானுவெனும் வேலப்ப பன். (347)

### ஆண்டி செட்டி.

விருத்தம்.

உத்தமர் பரவு கேதா ருடையர்க்கு மடமுங்கட்டி
கொற்றவர்க்கினிய கோதைக் கடவுள் மண்டபமுண்டாக்கி
நற்றவம் படைத்துவாழு நற்குசச் செட்டிமாருள்
கொற்றவ னாண்டிசெட்டி குலந்தழைத் தேறத்தானே (348)

### நல்லான் செட்டி.

வெண்பா.

வில்வ விநாயகர்முன் மேவ வொரு சாவடிசெங்
கல்விளங்கச் செய்து களித்தானே—பல்கும்
அகரங் கறுப்ப னருந்தவத்தி லுற்ற
மகனல்லான் செட்டியெனு மால். 349)

* மேனாண் செட்டிகள் என்ப.

## பெரியாள்.

விருத்தம்.

உத்தம வீரவாகி னுயர்குலப் பெரியா ளாண்டான்
கொத்தரி னிருந்தி மூலைக் குள * மிளங்கோயில் * வேலர்க்
கர்த்த மிண்டபமுங் கர்ப்பவகமகா மண்டபங்கள்
பத்தியின் புரிந்து தானம் பல பணிமலையிற் செய்தாள். (350)

## விருமக் கொல்லன்.

படிபுகழ் விசய வாண்டிற் பரிவுள கோதை வீதி
யடைவுடை யக்கசாலை யாதிபருபயமாகத்
கடமிகு குறடுந்தூணுஞ் சகலமு முடித்து நன்றாய்
வடிவுற விருமக் கொல்லன் மண்டபங் கட்டினானே. (351)

## சிதம்பரம்.

வெண்பா

சத்தமா தாவுந் தடவரைநூ ரும்படியும்
பத்தியுடன் கோதையிலே பண்ணினான்—புத்திதரு
தெய்வ மதுரைவரு சீயாலக் கட்டிமடஞ்
சைவன் சிதம்பரநா தன். (352)

## இடைய, செல்லன்.

கோதை யழகியம்மை குறடுபணி மண்டபமும்
மாதயவா கச்சமைத்து வைத்தானே—நீதிபுனை
கோபால கிருஷ்ண குலதீப மானசெல்ல
பூபாலன் பெற்றான் புகழ். (353)

## கோபாலன்.

கட்டளைக்கலித்துறை.

மாபத்தரேத்திட வைகாசி வீதி வடசிறகிற்
கூபத்தருகி லழகாக வேயொரு கோவில்கட்டித்

ஓடமபாழுதி ஒங்காளியம்மன் கோவிற்குட்டை. * அங்கு ஒரு சுப்பிர மணியாலயம் என்ப.

தாபத்தை மாற்றிடு மாயன்கோ பாலன் றருவனையான்
ஆபத்துக் காத்தவி நாயக னுரையுண் டாக்கினனே ( 54)

கொழுங்கொண்டை, கணக்கன், சுப்பிரமணிய பிள்ளை.

ஆசிரிய விருத்தம்.

ஆதிகாலத்திலே காமதேனுச்சிவனை யன்புடன் போற்றிசெய் தே, அம்பொன்மா மேருதனிலேந்து நன்னுடியெற் கருள்கவென வவை தந்ததுஞ், சூதமுனிதல புராணந்தனிற் சொன்னதுந் தூலமாய் நாகமலையாய்த்,தோன்றவேயதனிட சொரூப பிம்பமென்னவே தொல்லுலகமறியும் வகையாய்ச், சேதிபெறுமல்லைத்திருக்கை வேலப்பனருள் செல்வனுஞ் சுப்பிரமணியன் செங்கோடரைத் தொழுதுகங்கை சுனைகிழ்புரஞ்செய்தனன் சற்பவுருவாய்ப், பாதலந் தன்னில்வாலண்ட முடியிற்சிரசுபடமைந்து மாகவேதான் பத்தி யொடுசெய்தனன் கோதையரனருளினுற் பதினுறு மைந்தர்பெற வே. (355)

வெண்பா.

நாகமுகன் றன்னைவலம் நாகலிங்கந் தன்னையிடம்
வாகுவடி வேலவர்முன் வைத்தானே—வாகுடனே
சேகரனும் மல்லைத் திருக்கைவே லப்பன்மைந்தன்
ஆகமகிழ் சுப்பிரமணி யன். (356)

நாகபடங் கைலாய நாதருக்குத் தானீந்தான்
நாகமென்றோர் வாகனமு நல்கினன்—நாகசிதன்
சேகரமா மல்லைத் திருக்கைவே லப்பன் மைந்தன்
மாகதரு சுப்ரமண்ய மால். (357)

தண்டாயுத பிள்ளை.

மங்கைபத்ர காளியம்மை மண்டபத்துக் கேறிவர
சிங்கமிரண் டும்படியுஞ் செய்தானே—பொங்குபுகழ்
ஞானபரன் கோதையர்த்த நாரி பரிவாகத்
தானபரன் றண்டாயு தன். (358)

## காகமுப்பன், முனியன்.

### விருத்தம்.

நாககிரிக்குகந்தபடி யறுபதுமேலேந்துதலை நாகஞ்செய்து, வாகுடனேமறையவர்க்கு மகேசுரர்க்கு மன்னசொன்னம் வழங்கியன்பாய், ஆகமுடன் பூசித்தா னர்த்தநாரீசர்தம தருளைபெற்றுக், காகமுப்பன் முனியன் மங்கையுள்ளோர செல்வமதாற் கதிக்கின்றுரே. (359)

## நாகசுர நல்லதம்பி.

### வெண்பா.

நாகசுர கானனரு ணல்லதம்பி கட்டியன்பால்
மாகமுறு நாக மலையார்க்கு—மோகமுறு
வானுயருங் கைலாய வாகனமும் பண்ணுவித்துத்
தானுயருங் கீர்த்தியடைந் தான். (360)

## திருவகம்படிமை.

## திருமுடியார்.

### ஆசிரியவிருத்தம்.

சீர்மருவு நாககிரி வடிவேலருமை பாகர் திருமேனிகாவலுடனே திருமாலை கருவூலவறை யுக்கராணங்க டிகழகம்படி யூழியம், பார்மருவுதளியிலாண் பெண்காணி கும்பார்த்தி பரிவுபெறு வெண்சாமரம் பாவாடை விசிறிநடனங்கடிரு வாலத்தி பதுமபுட் பாஞ்சலிகளும், ஏர்மருவு பலநாடகங்களொடு காவியமிராக நாலெட்டுவகையு, மேழுதாளங்களிய லிசைபரத விதமேவி யிற்றெழில் புரிந்துநிதமும், பேர்மருவுபூதிபஞ் சாக்ஷரமணிந்து நெறிபெற்ற குரவோரடிதனைப் பேணிவரமெய்தியே தானீகரேவு பணிபிரியாதிருந்தனர்களே. (361)

## செங்குந்தர்.

அன்புநெறிபெறு வீரவாகு மரபினிலுதித் தழகானநாககிரி வாழ், அர்த்தநாரீசர்வடி வேலரை வணங்கியே யவர்பணிவிடைக்

கினியராய்த், தென்பயிலுநட்டுவம் மத்தளம்பேரிகை சிறந்தபதி னெண்மேளமுஞ், சீர்பாதசுமையினோடு மன்புமிகு மாண்மக்கள் செய்யடிமை பெண்காணியும், மன்புகழுநடனவித ராகவிசைதாள முமதித்த மங்களநிர்த்தமு, மாறுசத்திரகவுரி விருதுபலபாவாடை மன்னுமழகாலத்தியும், இன்பமுட னின்னவைகள் சந்ததமியற் றியே யிளையவன் வரமெய்தியே, யியலான குரவோர்களேவுதொழி லாளரெனு மினியகைக்கோளரிவரே. (362)

## சில்லரைத் தருமங்கள்.

அரவகிரி யாலயந்தனில் நிருதிமூலைதனிலானை முகவன் மே விலுண் டாக்கியது கைக்கோளநல்ல நயினானுபய மழகுகணபதி* கோவிலுந், திருவழகுமடவடிமை யானதேவாள் பரிசு சீர்பாத மண் டபமுடன் சிகரமது விருமியுபயம் பெரியவசவனுஞ் செஞ்சொல் மல்லுடையருபயம், பரவரியநாகதீர்த்தத் தருகுசோபான பதி மேலைவாய்த றனிலே படியுநடமாளிகையு மிவைகுசச்செட்டிகள் பணிந்தது நெடுஞ்சுனையினன், மருவியகவிங்குகண பதிசுனைமதிற் கருணை வாலராசன் புண்ணியம், மன்னு சண்பகவிநாகர் செம்பகுல மதனில் வாய்த்த பொம்மணனுபயமே. (363)

படவரவ கிரிமீதிலட்ட கொற்றவைபஞ்ச பாண்டவர்கள்செய்த தருமம், பன்னுவட கோபுரப்படிவிநாயகர் கோவில் பரிவுராமாஞ்சி யுபயந், தடபிரமதீர்த்தத்தி னருகரிச்சனைபருகு தயவுடைய சோழ னுபயந், தாவுவடகோபுரஞ் சூழெடுத்துக்கட்டி தண்டமிழ்க்கட்டி யுபயந், திடமுடைய வேலவன் சந்நிதியிலேங்கரன் செங்குந்தவெற் றியுபயந் திருநந்திகே சுரர்குறடு மயிலனபரிசு சிகிவானக் குறடு டன், அடைவுபெறு பலிகுறடுவாலராசன் றரும மழகுகோபுர வாசலி லருகணைக ளாறுறு படிவிசாலங்கருணை யாவினன் குடி யுபயமே. (364)

☞ இன்னுஞ் சில பாடல்கள் மிகச் சிதைந்து காணப்படு கின்றன வாதாலால், அவை யிங்கே பதிப்பிக்கப்படவில்லை.

---

* அழகு விநாயகன். கொங்குவேளாளர் விவாக காலத்தில் வாழி கூறுதல் முதலிய உரிமை யினரான புலவன், பட்டன், தக்கை கொட்டி, கூத்தாடி, பண்பாடி, முதலிய இவகை யினரும் கூடி, வயது வந்த தங்கள் தங்கள் மக்களில் அவ்வவ் உரிமைகளுக்கு அருகர் இவரென அங்கீகரித்தபின், முதன்மையோனால் தாம்பூலந் தரப்பெறுஞ் சந்தி.

# இங்கிலீஷ் துரைத்தனம்.

## ஈஸ்டிந்தியாக் கம்பேனியார்.

### கட்டளைக்கலித்துறை.

வளமுற்ற வீஸ்டிந்தி யாக்கம் பெனியார் வலியவெம்போர்க்
களநட்ட மின்றிப் படிபெற்றுப் பூநா கமலேகின்ற
தளவுற்ற மூர லுமைபாகர் பூசை தனைநடத்தி
யளவற்ற நாடுஞ் சயமும் புகழு மடைந்தனரே. (365)

## விக்டோரியா சக்கரவர்த்தினி. VICTORIA.

உரைசாலி யோரா யிரத்தெழு நூற்றெண்பத் தொன்றதனிற்
றுரைசாணி விக்டோரி யாப்பெரு மாட்டி துகளறவித்
தரைசால வாளத் தொடங்கின ளிங்க்லண்டு தன்னினின்று
பரைசீ கலைமகண் மூவரும் சேர்ந்த படிவமென்றே. (366)

எக்கிர மங்களுங் கோணும னித்திய மேமுதலா
அக்கிர மான விழாக்களு மாக வமைத்ததனால்
அக்கர ரூபரெனுநாரி பாக னருள் சுரந்து
சக்கர வர்த்தினி யாகவிக் டோர்யா தழைத்தனளே. (367)

நீராவிக் கப்பலும் வண்டியு நூற்பு நெசவு மற்றும்
நேரான தந்தியுஞ் சைகிலுங் காற்று* நெருப்புகுச்சி
சீரான சர்வ கலாசாலை மேன்மைச் சிகிச்சையெல்லாம்
பேரான விக்டோரி யாகாலத் துற்ற பிரபலமே. (368)

## மைசூர் மஹாராஜா கிருஷ்ணராஜேந்திர உடையார்.

அரவா சலத்தெழு நாரீசர் பொன்னடி யன்புகொடோவ்
வொருநாளும் பூசைகை வேதன மாதியு மோங்கு விடைத்
திருநாளுஞ் செய்தனன் கர்னடகத் தடல் சேர்ந்தமைசூர்
அரியா தனன்கிருஷ்ண ராஜேந் திரவுடை யார்மகிழ்ந்தே. 369

* காற்று—Gas.

### சேலம் ஜில்லா கலெக்டர் டேவிஸ் துரை. W. D. DAVIS.

தாண்டவ பத்ரை விலாசத்திற் பாக்கற் சரியுமென
ஆண்டுறக் கண்டுகற் றாஞென்று நாட்டினன் ஊைரவர்கள்*
வேண்டிடு சேலங் கலெக்டருத் யோகத்தின் மேவிவந்த
ஆண்டகை டேவிஸ் துரையிசை யோங்க வவனியிலே. (370)

### நாககிரி பண்டிதர்.

முன்னு லமர்கட வுட்கரு கேழுத்த மூரலுமை
மின்னுல முண்ட சிவக்குறி சேர விதியின்வைத்தான்
சன்னுலம் பாயன நாக கிரிபண்டி தப்பெரியோன்
பொன்னுல மேந்திய மங்கையோர் பங்கன் பொருப் பிடத்தே. 371

### நாககிரி பண்டிதர் மனைவி-வள்ளியம்மை.

நல்லா ளிடத்தர் கிரிவலத் தேயிடை நன்குறச்செங்
கல்லா லொருமண் டப மிசைத் தாளிக் கவினுலகிற்
பல்லா கமத்துறை தேர்நா ககிரிமா பண்டிதன்றன்
இல்லா ளெனும்வள்ளி யம்மையுள் ளன்பி னெழின்மிகுத்தே.(372)

### சேனுபதிகுருக்கள்.

வானோர் மகிழுந் தமிழ்க்கோதை மாநகர் வாழ்வுபெற
மானோர் கரத்துக் கயிலாயநாதர் மகாலயத்தே
பானுலு சைவாக் கினியா னவக்கோட் பதிட்டைசெய்தான்
சேனு பதிக்குரு காசிப கோத்ரஞ் செழித்திடவே. (373)

### கோக்கராயன் பேட்டை மிட்டாஜமீன்தார், பெரிய ரங்கய கவுண்டர்.

மலைவல்லி பங்கர்க்கு மாலுக்கு மானை வதனனுக்குங்
கலைவல்லவர்புகழ் தேர்களையுள்ளங் களிந்தளித்தான்
அலைகின்ற தானிகராதியர்க் கட்சய வாண்டைப்பஞ்ச
மலைவறக் கூல § முதலிய ரங்கய வண்ணகையனே. (374)

---

* ஊரவர்கள்—ஐரோப்பியர்கள்.

§ கூலம்—நெல் முதலிய தானியங்கள்.

வேலவர் நின்றவி மானஞ் சுதைப்பணி த்தகராற்
கோலி நகுகன கங்தோய் கலசமுங் கூட்டியகேதும்
மாலவ னுக்கட்ட பந்தனமுஞ் செய்து மாட்சியுற்றான்
சீலன் பெரிய விரங்கய னேவைச் சிரோன்மணியே (375)

பெருமா னடிதொழ மலையேறு மன்பரைக் பேணவன்னங்
குருமார் தரக்கட் டளையிசைத் தான்முனங் கோரைகுட்டைப்
பெருமா னுருவமுந் தோவிழா பூசை பிறவுமெல்லா
வருமான முஞ்செ யிரங்கய வித்வ மணிவிளக்கே. (376)

சித்திர் வேலர் சிவாம்பிகை யாருட் டிருக்கதலம்
பித்தளை மேற்றகட் டாலமைத் தானப் பிரமலிங்கர்
கொந்தளவேவை யரனுமை நாரணன் கோயின்முற்றுஞ்
சுத்தி கரம்புரி ரங்கய னுன சுபாகரனே. (377)

இன்ன சகம்பதி னெண்ணூ றுடன்பதி னேழுசய
மன்னுகை லாய ரிடமார் பரிமள வல்லியம்மை
துன்னு சிகரியிற் றங்கக் கலசந் துலங்கவைத்தான்
நன்னயன் றண்டிகை வேலவன் மைந்தனி ரங்கயனே. (378)

சேகர வேதநன் னுபகார்க் கில்லமுந் தீட்சைபுரி
நாக கிரிபண் டிதருக்கு முன்மனை நல்கினனால்
நாக மலையின் வடகோ புரத்தடி நாட்டுசிவ
யோகசித் தாந்தி யிரங்கய னுமதி யூகியன்றே. (379)

கொஞ்சிட வீதி வருகுகன் கோயிலுங் கூபநந்தி
மிஞ்சு சுதைப்பணி சாயமுந் தீட்டி விளங்கவைத்தான்
செஞ்சொறில் லைப்பொன்னு சாமிநற் றீட்சிதர் செய்பணிக்கு
நஞ்சை நிலமொன் றுப் புக்கோம்பை யிற்றரு ரங்கயனே. (380)

வெங்கடேசன் செட்டி.

இல்லா ருழைத்துண்ப ளிவ்வள வுள்ள திதனைமலை
நல்லா ளிடத்தற் குதவுக வென்ன விரங்கயன்பாற்
சொல்லாட வெள்ளி விடையிசைத் தீசன்மேற் றோன்றநல
மல்லா ளி பாளயத் தார்வேங்க டேச னடைந்தனனே. (381)

குமரமங்கலம் மிட்டா ஜமீன்தார், கைலாச கவுண்டர்.

வேயாருந் தோளி யுமைபாகர் மேவி விளங்கமங்கைச்
சீயால கட்டி முதலிமுன் செய்த சிகரமதிற்
காயாட கத்தக டேற்றிய நல்ல கலசம் வைத்தான்
சேயார் குமா புரிவாழ்கை லாச சிகாமணியே. (382)

அர்த்தநாரி அய்யன்.

தவக்குறை முற்று தலமாஞ்செங்கோட்டுத் தடவரைமேல்
நவக்கிர கந்தனை யன்பாய்ப் பதிட்டை நயந்துசெய்தான்
சிவத்துசச் செல்லய ளுமர்த்த நாரி செழும்பணிப்பூண்
செவிக்கணி நாக கிரிபண் டிதன்றனைச் சேர்ந்தவனே. (383)

கருப்பண முதலி.

பணிகிரி மேவிடு பாண்டீசர் கோவிலைப் பாங்குறக்கற்
பணியுஞ் சுதைப்பணிச் சிகரமு மாக்கிப் பதிட்டைசெய்தான்
அணிமே விடுமுஞ் சினைக்கவுண் டன்பா லயத்தில்வரு
கணிசநற் செங்குந்த நல்லய னீன்ற கருப்பணனே. (384)

தம்பா செட்டி.

வீட்டினை விற்றெழில் வெள்ளி மயில்செய்து வேலவருக்
கீட்டின னாறு முகப்பெரு மானுக் கிரதவிழா
நாட்டிலெப் போது நடக்கவென் றுள்ளமேவார் நற்கடையைத்
தீட்டினன் சாசனங் கோதை நகர்தம்பா செட்டியன்றே. (385)

VII. எட்வர்ட் சக்கரவர்த்தி. EDWARD.

பத்தொன்பதுநூற் றிரண்டுகிரிஸ் தாண்டிற் பகருமெழா
மத்தமனெட் வர்டுயர் சக்கிர வர்த்தியா யன்பர்பணி
சத்தி யிடத்தனுக் குப்பூசை யுற்சவந் தானடக்க
வித்தக வன்னையைப் போலளித் தோங்கி விளங்கினனே. (386)

தேவுங்கு சங்கமர்கள்.

மடமு மலையடி மண்டபங் கோதை மகேசனுக்கு
இடபந் தனில்வரு கல்யாண முஞ்செய் திறைஞ்சினரால்

இடவங் கையிலிங்க மேந்திய ராதன மேத்தவல
சடலம் பொருந்தி யவராந் தெலுங்கிசை சங்கமரே (387)

விவேகாதிவாகரன் பத்திராதிபர்,
முத்துசாமிக் கோனர்.

தபதிய ரைக்கொடு கண்டசண் டேசனைற் றுபனையு
முபகிட தப்பொரு ளாமுமை பாகரோ டுற்சவமுஞ்
சுபமிகு சைவ சமாஜமிக் கோலைதனிற் றோற்றுவித்த
விபவ னெழின் முத்துசாமி செய்தானுள் விருப்பமுற்றே. (388)

சாற்றிய வேதப் பொருளா முமைபங்கர் சந்நதியில்
நாற்றிய லஸ்தர் குலோப்புடன் லாந்தர்க ளூட்டிவைத்தான்
ஆற்றிய லாநதிருச் செங்கோட்டு மான்மிய மாக்கியன்பிற்
போற்றிய கோன்முத்து சாமி யுயரிசை பூண்டவனே. (389)

கோக்கராயன்பேட்டை,
மிட்டா ஜமீன்தார் தண்டிகைவேல கவுண்டர்.

பொன்னித் துறைமுள சைத்தண்டி கைவேற் புரவலன்கோ
வன்னத் திடத்தர் திருத்தேர் விழாவினி லேயிருநாள்
பண்ணித் துதிவே தியர்களுக் கன்னம் பரிந்தளித்தான்
அன்னத் தியாகி யெனத்தண் டிகைவே லகமகிழ்ந்தே. (390)

சகலா கமப்பொரு ளுண்மைய தான சதீச னிவர்ந்
திகலா மதிவரு தேர்பொல் லரைக்கொண் டெவருமேச்சச்
சகலாத்தி றுற்சித் திரித்தணிந் தான்கண்ணர் தங்கள்குலஞ்
சுகலாப மெய்துறத் தண்டிகை வேலன்பு தாண்டிடவே. (391)

கண்டிகை நான்முனி வோரறி யுண்மைக் கருத்துவிரித்
தண்டிகை நோயடு சைவ சமாஜ மனவரதஞ்
சண்டிகை போற்றிடு செங்கோட்டின் மேவித் தழைக்கவெங்கள்
தண்டிகை வேல மகிபனைஞ் ஞூறுபொன் றந்தனனே. (392)

குமாரசாமிப்பரதேசி.

ஆறு முகப்பெரு மாள்சந் நதியினி லப்புகுன்று
தூறுங் கிணறொன்று தோண்டி யிருநான் குருவையிட்டு
நாறும் பனிமல ரீட்டுநந் தாவன நன்கமைத்தான்
கூறுந் துறவி குமாரச் சுவாமி குணமடைந்தே. (393)

## V-ம் ஜார்ஜ் சக்ரவர்த்தி. GEORGE.

முன்னே ளித்த முறைவழுவாமன் முழுத்தொகையும்
பொன்னே ருடைமையொரு பாகருக் கீந்து புகழ்படைத்தான்
கன்னுவ தாரன் முடிசூட்டு வைபவக் காட்சிதரத்
தன்னேரி லாடில்லி மேவிய ஜார்ஜு தயாபரனே. (394)

விருத்தம்.

" இருபத்தை யாயிரஞ்சுற் றளவைமயிற் கோளத்து ளெக்கண்டத்தும், இரவிப்பே ரொளிமறையா திணையில்சயக் கொடிவிளங்க விங்கி லாந்தின், மருவிப்பல் வேறுவகை மாந்தர்களும் பாராட்ட மன்னுயிர்க்கெப், பருவத்துந் துயரணுகா திருக்கவிசை விக்டோரியாப் பனுவலாட்டி. (395)

அட்டவிலக் குமிபுமொன் றுயமைந்தவத ரித்தவம்மை யரசாங்கத்துட், பட்டவுடை ணிவிந்தியா புதியனவாய் விம்மிதங்கள் பலகண்டொன்றார், துட்டமகன் றவ்வவர்சிந் தனைபோல வுடுக்கவுண்ணச் சுகிக்கச் சொல்லப், பட்டவருந் தனராகப் பயமின்றிச் செல்ல நல லபாக்கிய முற்ற. (396)

அன்னவளி லரசனுக்கு மரிதான பொருண்மலே யடவி வாழ்வோர், இன்னவளி லடையவுந்தா முயருமுயற் சியிற்புகவு மேற்ற மீந்த, தன்னேரி லாதவொரு தனியரசி விக்டோரியாத் தவத்தால் வந்த, மன்னேறே ழாவதெட்வர்ட் மன்னர்மன்ன னீன்றஜார்ஜ் மகிபன் மாதோ. (397)

ஆயிரத்தோர் தொள்ளாயி ரம்பதினொன் றுமாண்டை யடைடிசம்பர், மேயபனி ரண்டாம்நாள் மங்களவா ரத்துமுடிவிளங்கப் பூண்டான், சியமொத்த முடியரசர் திகழுமறி வான்மிகுந்த இறைவோர் மற்றைத், தேயகர்த்தர் வர்த்தமா னம்புகல்வோர் கவிவாணர் செறிந்து சூழ. (398)

ஐந்தாம்ஜார்ஜ் ஜாசன்முடி யாங்குதரித் தாலுமென்ன வரன்போற் * காட்சி, தந்தாள்மேவா மாங்கென்னச் சாற்றியவாக் குறுதி

* கைலாயத்தில் நடந்த திருமணக்காட்சியை, ஆங்கிருக்க வியலாத அகத்தியருக்குப் பொதிகையிற் காட்டுவோமென்ற சிவபிரான் போல.

செய்யத் தயைகூர்ந் ததயன், ஐந்தாயிரத்துமபி லளவையிலே கடற் கடந்தே யரிதி னெய்திச், சந்தோட மாகவிந்த்ர ப்ரஸ்தமெனும் டில்லிநகர் தன்னை யண்மி. (399)

ஆங்குநிகழ் ந்தபெரிதன் றவனியிலெலாவ் வோரிடத்து மரி யமாந்தர், தேங்குசபை கூடியுல கம்புரப்போ னைக்காத்தற் றெய்வ மாக, ஓங்குகலை யாதிமறை யோதுவதா வைனப்போ லுருவை யேனும், ஈங்குவைத்திங் காளே கொண் டாடுவமென் றகமகிழ்ந்தே யினிதினைத்த. (400)

மங்களமா யிந்தவகை மருடதா ரணக்கட்சி வழங்கி னோர் கள், எங்குளரிம் மன்னவனே யிந்த்யாவின் மணிமகுட மேற்க வந்தோன், திங்களினுந் தண்ணயனேழ் சிந்துவினும் பெரும்படை யன் சிறந்த தேவர், தங்களுடை மந்திரியினு மதியூகி வாசகத்திற் சதுர தீரன். (401)

இன்னபல மேன்மையெல்லா மொருங்கெய்தப் பெற்றதிற லேந்தல் செங்கோல்,இன்னின்மு மங்கிலமு மெங்கிலமு மினிதோங்கி யேத்தத் தூய, அன்னையெனு மேரியம்மா ளகமகிழ வரியமக்களறி விலோங்க, முன்னவனுப் மூவாத முதல்வனருள் நிரம்பாசி மொழிக மாதோ. (402)

சீர்விளங்கு சபைசிறக்கச் செறிந்தமருஞ் சீமான்காள்! திகழ் பல் வேறு, பேர்விளங்கு மதத்தினருந் தரத்தினரு மழுக்காறு பேணுதொன்றி, ஏர்விளங்கு பிரியசகோ தரர்மானக் குழுமியெந்த வேந்தன் மேன்மை, பார்விளங்கு வாய்மையினூற் பேசுதுமோ வவமோங்கப் பரனை யுள்வாம்." (403)

சேலம் ஜில்லா கலெக்டர் பெட்போர்ட். G. BEDFORD.
சங்ககிரி டிப்டி-கலெக்டர், சிவஞானம் பிள்ளை,
ஸ்டேஷனரி சப்மாஜிஸ்திரேட்டு, ஆறுமுக முதலியார்.

கட்டளைக்கலித்துறை.

தவகா கமலே வலமுறப் பாதை தருகவெனச்
சிவஞானம் பிள்ளை சொலப்பொரு டேடிச் சிறக்கவமைத்
தவனு றுமுக முதலியெட் வர்ட்ரோட் தானெனமன்
னவனும மிட்டவன் பெட்போர்ட் மேலா நயமுறவே. (404)

சித்தளந்தூர், சுப்பராய கவுண்டர்.

மருவூருங் கோதைக் கயிலாய நாதர் மகாலயத்தின்
கருவூலத் துக்கு ளுயர்பூட் டிசைத்துநற் காப்பமைத்தான்
தருவூருஞ் சித்தளந் தூர்க்குச்ச மீன்றுத்து சாமிசுதன்
திருவூருந் தூரன் புகழ்சுப்ப ராய சுபாகரனே. (405)

மோழைக்கவுண்டன்பாளையம் வேட்டுவர்கள்.

பேறுறு கோதைநன் ஞகேந்தி தூபி பெருமையொடன்
றுறை யிளையா னமைத்தன னம்மர பாளர்களிற்
றேறிடு மோழை நகரா ரரும்பொரு டேடிச்சுதைக்
கூறு பணியும் பதிட்டையுஞ் செய்து கொழுத்தனரே.(406)

தெலுங்கு செட்டிகள்.

கிளரொளிக் கோதையின் வைகாசி வீதிதென் கீழ்முனையில்
வளமுறக் கன்மண்டப மார்க்காக்கி மகிழ்ச்சியுற்றார்
வளரிசைக் காஞ்சிபொற் காமாட்சி யம்மை வரத்திலுற்றுப்
தெளிவுறத் தேசா திபரெனச் சொல்லுந் தெலுங்கர்களே.

மலை வடகோபுரம்.

ஆசிரிய விருத்தம்.

தருவுலவு குமரபுரி வாழ் சுப்பராயன் சபாபதியும் ராஜப்ப னுஞ், ஜமீன்தார்கள் தருநிதியு நாகமலை மாப்பிள்ளை தங்குசுப்பராய னுடனே, திருவுலவு நாககிரி பண்டிதன் மீனாட்சி செங்கோட்டை யன் நாரணன், சேரர்த்த நாரிகெய்க் கார பட்டியில்வந்த சிரத்தை காட்டுஞ் சடையனும், பரிவுபெறு பலரிடத்துந் தேடியோடிப் பணங்கொண்டு கற்பணிசுதைப் பணிமுடித்தனர் முத்துகிருஷ்ண வேங்கடவணிகர் பகர்தாம்ர கலசமமைந்தும், அரிதி னுதவினர் ஜமீன் சுப்பராயன் றங்கமது பூசியமைத்தனர், ஞாகவிவ் வாறுபணி மலையின் வடகோபுர மமைந்ததமெனு முலகமே. (408)

———